# கண்ணன் கதை

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்



அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம் : திருச்சி ஜில்லா.

# பதிப்புரை

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் இயற்றிய "கண்ணன் கதை" என்னும் இக் குறுஞ்சுவடி கண்ணபிரான் வரலாற்றுடன், கீதோபதேசத்தையும் சுருக்கமாக விளக்குகிறது. கண்ணன் கீதை, இந்தியாவின் பொதுமறையாய் விளங்குகிறது. இவ்வன்பு மலர் ஸ்ரீ வைகுண்ட ஏகாதசியாகிய இன்று, கண்ணனின் காணிக்கையாக வெளிவருகிறது.

அன்பு நிலயத்தார்.

இராமச்சந்திரபுரம்
15—12—1945

கூசா—க—ரு

# பொருளடக்கம்



# கண்ணன் கதை

## 1. கண்ண பரமாத்மா!

இ-ம்: செஞ்சுருட்டி] [திஸ்ர ஏக தாளம்

உன்னடியில் அன்பு வைத்தோம் கண்ணபர மாத்மா
உலகெல்லாம் நீயெமக்குக் கண்ணபர மாத்மா
வன்ன மலர்க் காலையிலே கண்ணபர மாத்மா
வசந்தமணம் பரப்புகிறாய் கண்ணபர மாத்மா!

பொன்பரவும் அருணனிலே கண்ணபர மாத்மா
புன்னகைசெய் அருளழகா கண்ணபர மாத்மா
மின்னொளிரும் மேகத்திலே கண்ணபர மாத்மா
மின்னுவதுன் வண்ணமடா கண்ணபர மாத்மா!

நச்சரவு மேலிருந்தே கண்ணபர மாத்மா
நர்த்தனஞ்செய் உத்தமனே கண்ணபர மாத்மா
அச்சமில்லை அச்சமில்லை கண்ணபர மாத்மா-உன்
அருளெம்மைக் காக்குமப்பா கண்ணபர மாத்மா!

காற்றினிலுன் பூங்குழலே கண்ணபர மாத்மா
காதில் வந்து கொஞ்சுதப்பா கண்ணபர மாத்மா
ஆற்றினிலுன் வேதவொலி கண்ணபர மாத்மா
ஆத்மசுகம் பேசுதப்பா கண்ணபர மாத்மா!

ஆவியிலே கலந்துவிட்டாய் கண்ணபர மாத்மா
அறிவினுக்கும் அறிவானாய் கண்ணபர மாத்மா
நாவினிலுன் கீதை சொல்லிக் கண்ணபர மாத்மா
நாட்டினிலுன் பணி புரிவோம் கண்ணபர மாத்மா!

## 2. பிருந்தாவனம்

அழகான முல்லை நிலம்; மலர்கள், பலநிறப் புன்னகை புரிகின்றன. யமுனை இன்ப அலைவீசித் தவழ்கிறது; ஆக்கள் மடி சுரக்கின்றன; குயில்கள் 'கண்ணு' என்று கூவுகின்றன; கிளிகள் 'கிருஷ்ணு' என்று கொஞ்சுகின்றன; வானம்பாடி 'ஹரி கோவிந்தா' என்று பாடிப் பறக்கிறது! கோவர்த்தன கிரி 'நான் இருக்கிறேன்!" என்று அபயமளித்து நிற்கிறது. இதுதான் பிருந்தாவனம், ஆயர்பாடி, கோபகோபியர் வாழும் சிற்றூர்!

இந்த ஊர் முழுதும் கண்ணன் மயந்தான்! தென்றலெல்லாம் அவன் குழலோசையைப் பருகி வரும்; மலர்களெல்லாம் "கண்ணு எம்மைச் சூட்டிக்கொள்" என்று புன்னகை புரிந்து கெஞ்சும்; மாடு கன்றுகளெல்லாம் கோபாலன் குழலோசையில் மயங்கி நிற்கும்; கோபாலர்களெல்லாரும் அவன் பேச்சே பேசுவார்கள்; கோபிகளுக் கெல்லாம் மனம் அவனிடமே நிலைத்திருக்கும்! கேளுங்கள், ராதை ஒரு கோபியிடம் பேசுவதை:

## 3. பால கோபாலன்

ராதை: மாயக் கண்ணன் இன்னும் வரவில்லையே! உள்ளம் துடிக்குதம்மா; ஊனும் உருகுதம்மா! இன்னும் எந்த அரக்கன் இக்கோபாலனைப் பழிவாங்க வந்தானே; பயமா யிருக்கிற தம்மா!

*கோபி:* பயமேன் ராதை? கண்ணன் முன்னே எந்த அதர்ம ராக்ஷஸன் நிற்கமுடியும்? கம்ஸன் வேலை இனிப் பலியாது.

*ராதை:* தோழீ! அந்தக் கம்ஸனுக்கு இந்தக் கண்ணனிடம் ஏனடீ இப்படிப் பகை மூண்டது?

*கோபி:* கேளம்மா கதையை: யதுகுல அதர்மனான கம்ஸன் தந்தை, உக்ரசேனனைச் சிறையிட்டுப் பலாத்காரமாக மதுரையை ஆளுகிறான். சகோதரி தேவகிக்கும் வசுதேவனுக்கும் திருமணம் நடந்தது. பவனி வரும்போது கம்ஸன் தேரோட்டினானும். அப்போது, "அடே கம்ஸா! இதே தேவகிக்குப் பிறக்கும் எட்டாவது பிள்ளை உன்னைக் கொல்வானடா" என்றோர் அசரீரி வாக்குக் கேட்டதாம்! கொடிய கம்ஸன் உடனே வாளுருவித் தேவகியை வெட்டப் போனான். வசுதேவர் தடுத்து, "அப்பா, பெண் கொலை ஆகாது; பிறக்குங் குழந்தையை உன்னிடம் தந்து விடுகிறோம்" என்று சமாதானம் சொன்ன பிறகு, கோபந் தணிந்தானும். தேவகி கர்ப்பமானதும் அவளைக் கணவனுடனே சிறையிட்டான் கம்ஸன். அவளுக்குப் பிறந்த குழந்தைகளை யெல்லாம் மாமா அசுரன் கொலைசெய்து வந்தான். கண்ணனைக் கருத்தரித்த தேவகி, கவலை கொண்டழுதாள். அப்போது, "அம்மா, கவலைப்படாதே; உலகம் அசுரக் காடானது; அதைச் செப்பனிடவே நான் உன் வயிற்றில் பிறக்கப் போகிறேன்! பிறந்ததும் என்னை ஆயர்பாடி யசோதை பக்கத்தில் வைத்துவிட்டு, அவளுக்கு

அதேசமயம் பிறக்கும் மாயை என்னும் பெண் குழந்தையை இங்கே கொண்டு வாருங்கள்; நான் வழிவிடுவேன்!" என்று உள்ளக் கண்ணன் ஒளி வடிவாகத் தோன்றி, தைரியப்படுத்தினுன்!

கண்ணன் பிறந்தான்! வசுதேவர் குழந்தையை நம் ஆயர்பாடிக்குக் கொண்டுவந்து, மேற்சொன்ன படியே செய்து, மாயையைக் கொண்டுபோனுர். அதுகாறும் உலகம் இருள் மூண்டது; மழை பொழிந்தது. எல்லா உயிர்களும் மாயவுறக்கத்தில் ஆழ்ந்தன! இயற்கை வழிவிட்டது! விடிந்ததும் வந்தான் கம்ஸன்; குழந்தை மாயையைப் பற்றி வாளால் வீசினுன்: "அடே! அசுரப் பதரே! கொலேபாதகா! உன் ரத்தவாளால் காற்றைப் பிளந்தாலும், உன் சினப் புயலால் கதிரை அணேத்தாலும், என் உயிரை அவிக்க முடியாதடா! உன் உயிரை வாங்கும் குழந்தை கோகுலத்தில் வளர்கிருன்; கவனம்!" என்று மாயை மறைந்தது! அசுர மாமா, "அப்படியா? ஹா!" என்றெழுந்து ஆயர்பாடியில் வளரும் கண்ணனேக் கண்டு, கொலே செய்யப் பல அசுரரை அனுப்பினுன்; அவர்களே இப்படி வந்து தொல்லே செய்கிருர்கள்!

நினேத்தாலும் பயமாயிருக்கிறதம்மா! பூதகிப்பேய் விஷப்பால் கொடுக்க வந்தாள். முலேயுடன் அவள் உயிரையும் உறுஞ்சிவிட்டான், என் கண்ணன்! சடகாசுரன் வந்தான். குழந்தை, காலால் உதைத்து நொறுக்கினுன். குருவளியாய் வந்தான் திருணுவர்த்தன். அவனே நசுக்கி யெறிந்து கொன்ருன் கண்ணன். கன்ருக வந்தான் ஓர் அரக்கன்; இளங்கண்

ணன் அவனைக் காலைவாரி ஒரு கனிமரத்தின்மேல் எறிந்தான்; கலகலவென்று கனிகள் உதிர்ந்தன. பாற்கடல் போல விரிந்த பசுமந்தையை நடத்திக் கொண்டு கண்ணன் புலன்களுக்குச் செல்வான். ஆயிரம் கோபாலர்களுடன் அவன் குழலூதி ஆடிப் பாடிச் செல்லும் காட்சியே காட்சி! ஒருநாள் பசு மேய்க்கும்போது அகாசுரப் பாம்பு, கோபாலர்களை அப்படியே விழுங்கியது. கண்ணன் தானும் பாம்பு வாயிற் புகுந்து, உருவைப் பெருக்கிவிட்டான்! பாம்பு கண் பிதுங்கி வயிறு வெடித்து இறந்தது. கோபாலர்களுடன் கண்ணன் வெளியே வந்து விளை யாடினான். இன்னொரு நாள் கொக்கு ராக்ஷஸன் குழந்தையை விழுங்க வந்தான். கண்ணன் அவனைப் பிளந்தெறிந்தான். இன்னொருநாள் கழுதை யரக்கன் 'காழ் காழ்' என்று வந்தான். அவனையும் காலைவாரி யடித்துக் கனியுதிர்த்தான் கண்ணன். ஒருநாள் பிரமதேவனே பசுக்களையும் கோபாலச் சிறுவர்களை யும் எங்கோ ஒளித்துவிட்டான். கண்ணன் ஒவ் வொரு வீட்டிலும் தானே அவரவர் குழந்தைகளாக விளையாடினான். அதைக் கண்ட பிரமதேவன் வியந்து பயந்து, பசுக்களையும் பாலரையும் திருப்பித் தந்து கண்ணனைத் துதித்து வணங்கினான்! இவற்றையெல் லாம்விட ஆச்சரியம், காளிங்க நர்த்தனமே! காளிங்க மடுவை அந்த அகங்காரப் பாம்பு விஷமாக்கியது; அதன் வாடை பட்டாலும் உயிர் போய்விடும். கண் ணன், சிறு பையன்; தைரியமாகப் பாம்பின் தலை மேல் ஏறி நடம்புரிந்தானே! ஆ, உடனே பாம்பின் விஷக்கொழுப்பும் அடங்கியது!

*ராதை:* தோழி! அசுர சக்திகள் பலவடிவில் வருகின்றன. இந்தக் காலமே அசுரர் காலம். தெய்வ சக்தியால் கண்ணன் அசுர சக்தியை அழித்து வருகிறான்!

*கோபி:* அவன் ஆக்குவதும் அழிப்பதும் விளையாட்டாகத்தான் இருக்கின்றன. வீட்டிலும் விளையாட்டு, நாட்டிலும் விளையாட்டு. வீடெல்லாம் கண்ணன்; வீதியெல்லாம் கண்ணன். அதிலும் நம்முடன் அவன் ஆடும் விநோதங்கள் சொல்லி முடியாதம்மா. நம் வீட்டுக்குள் எப்படியோ வருகிறான். உரியை எட்டி வெண்ணெயைத் திருடுகிறான்; தோழருக்கும் குரங்குகளுக்கும் தருகிறான். 'பிடி பிடி' என்று துரத்தினால் ஒரே ஓட்டம்; திரும்பினால், பின்னால் வந்து கண்ணைப் பொத்துகிறான்! சடையைப் பிடித் திழுக்கிறான்; யாரடா என்றால் சிரிக்கிறான்; கன்றுகளை அவிழ்த்து விடுகிறான்; கேட்டால், "கட்டுண்டவருக்கு விடுதலை தருகிறேன்" என்கிறான்! கண்டிப் போமென்றால், அவனைக் கண்டதும் நம்மையே மறக்கிறோம்! யசோதையிடம், "அம்மா! உன் பிள்ளை மகா துஷ்டன்" என்கிறோம்; யசோதை கண்டிக்கப் போகிறாள். குழந்தை சாதுவாக உறங்குகிறான்! தாயார் தயிர் கடையும்போது வெண்ணெ கேட்கிறான். "இருட்டியதும் தருகிறேன்" என்றால், கண்ணை மூடிக்கொண்டு, 'இதோ இருட்டு! கொடு நவநீதம்" என்கிறான்! கொடுத்தால் தோழருக்குத் தந்து, இன்னும் என்கிறான். அம்மா அப்புறம் போனால், பால் பானையைஉருட்டுகிறான். நாங்கள் அடுத்த வீட்டுக்குச் சற்றே போனால், இவன் உள்ளே புகுந்து பானைகளை

உருட்டுகிருன். "அட துஷ்டக் கண்ணு!" என்று மிரட்டினுல், "உனக்கென்னடீ அடுத்த வீட்டில் வம்பு!" என்று கண்டிக்கிருன். அவன் விஷமம் பொறுக்காமல் யசோதை உரலில் கட்டிப் போட்டாள். குழந்தை உரலையும் இழுத்துத் தவழ்ந்து சென்று, இரண்டு மருத மரங்களைச் சாய்த்து விட்டானம்மா!

ராதை: முன்னே காமவெறியால் சாபம் பெற்ற நளகூபர மணிக்ரீவர்களே அந்த மரமாயிருந்து முக்தி பெற்றனர். தோழீ! கண்ணன் ஆடலெல்லாம் அவதாரலீலை; அவன் செய்வதெல்லாம் நன்மைக்கே!

கோபி: உண்மைதான்; இருந்தாலும், பெண்களிடம் அவன் செய்யும் சேட்டை மிதமிஞ்சிப் போனது. நாம் குளிக்கும்போது புடவைகளைப் புன்னை மரத்தில் எடுத்தொளித்து வேடிக்கை செய்கிருன்! சொல்லக்கூடாத பேச்சும் செய்கையும் உலகிற்கு நன்ருயில்லை. கண்ணனை ஸ்திரீலோலன் என்று எல்லாரும் பழிக்கிருர்கள்; கோபிகா லீலையைக் கேலி செய்கிருர்கள்.

ராதை: தத்துவம் தெரியா அசடரே, என் கண்ணனை அப்படிச் சொல்லுவார்கள். எட்டு வயதுக் குழந்தை நம்முடன் விளையாடினுலென்னடீ? கண்ணன் விளையாட்டு, காம விளையாட்டா? கண்ணன் யாரென்றே தெரியாமல் கண்டபடி சிலர் பேசுகிருர்கள்; நம் உள்ளத்தில் உள்ள உத்தமனே கண்ணனுகக் கண்ணெதிரே விளையாடுகிருன்! நம் உயிரும் உள்ளமும் அவனி

டமே இருக்கின்றன. நாம் கோவர்த்தன கிரியில் இந்திரனுக்குப் பொங்கலிட்டோம். அதைக் கண்ணனே உண்டான். இந்திரன் கோப மழை பெய்தான். கண்ணன் மலை நிழலில் நம்மைக் காத்தானே. அதைக் கண்டு இந்திரனும் வெட்கிச் சரண்புகுந்தானே. இந்திராதி தேவர்களும் சரண்புகும் அருளமுதனுகிய கண்ணன் செயலை, யார் அறியமுடியும்? அவன் செய்வது, நமக்கு அற்புதம்! அவனுக்கு ஆடல்! அந்தர்யாமியான கண்ணன் நம் ஆத்மநாதனன்ருே?

கோபி: ராதை, அவன் பெருமையை அறிந்த நீ யேன் பயப்பட்டாய்? நீ அவன் அன்பன்ருே?

ராதை: இருந்தாலும் என் அன்பு மனம் கண்ணனைக் காணுவிட்டால் வேதனை செய்கிறதம்மா!

இப்படி இவர்கள் பேசும்போது குழலோசை கேட்கிறது! "கண்ணன் அழைக்கிருன்; வாருங்கள், வாருங்கள்!" என்று கோபிமார் கூச்சலிட் டோடுகின்றனர். ராதையும் வெறி பிடித்ததுபோல், "கோபாலா, கண்ணு வருகிறேன்" என்ருேடுகிருள். நல்ல நிலா இரவு; யமுனைக்காடு மலர்மணம் வீசுகிறது. கண்ணன் குழலில் மயங்கிக் கோபிமார் தற்போதமிழந்து நிற்கின்றனர். வானும் புவியும் மயங்கி நின்றன. கண்ணன் கோபியருடன் விளையாடினுன். ஒவ்வொரு கோபியும் தன் அழகில் கண்ணன் மயங்கி விட்டதாகச் செருக்குறவே, கண்ணன் மறைந்தான்! எல்லாரும் அவனைத் தேடிச் சரணடைந்தனர். சர

ணடைந்த ஆன்மாக்களுடன் கண்ணன் கைகோத்து ராஸநடனம் புரிந்தான். ஒவ்வொருவர் உள்ளமும் கண்ணன் ஆலிங்கனத்தை உணர்ந்தது! ஜீவாத்மத் தொகுதியுடன் பரமாத்மா இப்படியே விளையாடு கிறான். இதுதான் கண்ணனின் பிருந்தாவன லீலா ரகசியம்!

## 4. கம்ஸன் வதம்

ஒருநாள் நாரதர், ஒரே சமயத்தில் கண்ணனை வீடு தோறுங் கண்டார்! நாரதர் கம்ஸனிடம் கண்ணன் பெருமையை வருணித்தார். மாமாவின் மனம், பகை ரென்றது; அவன் அக்ரூரரை அனுப்பி, தான்புரியும் ஒரு வேள்விக்காகக் கண்ணனை அழைத்தான். வழி யில் பல இடர்களைத் தாண்டிக் கண்ணன், அண்ணு பலராமருடன் மதுரை சேர்ந்து, இரவில் பூக்காரன் ஸுதாமன் வீட்டில் தங்கி, விடிந்ததும் வேள்விக்குச் சென்றான். கம்ஸனுக்குக் கிலி பிடித்தது; முஷ்டிகன் சாணூரன் என்னும் கொடிய மல்லரை, அவன் ஏவி னான். அண்ணன் தம்பிகள் இருவரும் இவ்வரக்கரைக் குத்திக் குமைத்தனர். பார்த்தான் கம்ஸன். "இத்தனை சூழ்ச்சிகளும் பலிக்கவில்லையே; இனி நாமே முடிவாக ஒரு கை பார்த்து, இச் சிறுவனை நொறுக்கி யெறி வோம்'' என்று தோள் கொட்டிப் பல்லைக் கடித்துக் கண் கனல் பறக்கக் கண்ணன் மீது பாய்ந்தான். ஒரே சுழற்றில் தொடையோடு பற்றிக் குப்புற வீழ்த்தி மார்பைப் பிளந்து, இந்த அதருமக் கம்ஸனைக் கண் ணன் கொன்று பூதேவியின் பாரத்தைத் தீர்த்தான்;

உடனே தாய் தந்தையரை விடுவித்தான்; உக்கிரசேன னுக்கு மதுரை யாட்சியைத் திருப்பி வழங்கினன். அதன்பின் கண்ணன் சிறிதுகாலம் சாந்தீபி முனிவ ரிடம் குருகுல வாசம் செய்தான்; பிறகு மதுராபுரியில் தரும ராஜ்யத்தை நாட்டி அரசாண்டான். இப்போது கம்ஸன் மாமனர் ஜராசந்தன் போருக் கிழுத்தான்; கண்ணன் ஜராசந்தனைப் பிளந்து கொன்றன். அதன் பின் நரகாசுரன், பாணசுரன், சிசுபாலன் முதலிய கொடிய அரக்கர்களை வீழ்த்தினன்.

## 5. தரும வீரம்

இனிக் கண்ணன் உலகிற்குற்ற காரியம் தொடங்கு கிறது: தீயர் கொடுமைகளை அழித்து, தருமத்தை நாட்டி, மகா பாரதம் (Greater India) ஆக்கவே கண் ணன் பிறந்தான். மனித மரபைப் பிடித்துப் பிளவு செய்யும் ஆசையாணவப் பேய்கள், துரியோதனதி களாக உருக்கொண்டு, அறவடிவமான பாண்டவர் களுக்குச் சொல்லொணுத் துயரிழைத்தன. மற்ற அசுர பலங்களை யெல்லாம் வீழ்த்திய கண்ணன், முடி வில் துரியோதனசுரனின் செருக்கைக் கவிழ்க்கக் குறி வைத்தான்.

ஏ, ஆணவப் பொறுமையே, நின் பெயர் துரியோத னன்! தரும வீரரான பாண்டவரை என்ன பாடுபடுத் தினய்! பீமன் கதையும் விஜயன் வில்லும் உன்னை நடுக்கின. பீமனை நீரில் அமிழ்த்தினய்; அவன் சோற் றில் விடம் வைத்தாய்; தூங்கும்போது அவனைக்

கட்டி, வெள்ளத்திற் போட்டாய்; வாரணுவதத்தில் அரக்கு மாளிகை கட்டி அதில் பாண்டவரை எரித்து விடப் பார்த்தாய்; நீ வைத்த தீ, உன் வீட்டையே எரித்தது; பாண்டவர் தப்பினர்; பாஞ்சாலத்தில் வீரப் போட்டியை வென்று, பாஞ்சாலியை மணந்தனர். ஆண்டவன் அறவோரைக் காத்தான்!

பொது மக்கள் ஒரே குரலுடன், தருமபுத்திரரே நாடாள வேண்டும் என்றனர். திருதராட்டிரன் பாண்டவருக்குப் பாதி யரசு ஈந்தான். பாண்டவர் இந்திரப் பிரஸ்தத்தில் தருமராஜ்யத்தை நாட்டி, வெற்றி வேள்வி நடத்தினர். பாரத நாட்டு மன்னரெல்லாரும் தருமபுத்திரருக்கு வேண்டிய சிறப்புச் செய்தனர். கண்ணனுக்குத் தருமன் முதல் மரியாதை செய்தான். துரியோதனனுக்குப் பொருமை பற்றிக்கொண்டது; பாண்டவரைத் தந்திரமாக அஸ்தினபுரிக்கு அழைத்தான்; சகுனி மாமாவைக் கொண்டு தருமருடன் மாயச்சூதாடி, அரசு, செல்வம், ஆள், மனை, அனைத்தையும் பணயம் வைத்துத் தோற்கச் செய்தான். அகங்கார மகிழ்வு பொங்கி, பத்தினியான பாஞ்சாலியைச் சபை நடுவே துயிலுரிய முயன்றான். "ஹரிஹரி சரணம்!" என்று பாஞ்சாலி முறையிட்டாள். ஆடை கடல்போல் வளர்ந்தது; துயிலுரிந்த துச்சாதனன் மயங்கி வீழ்ந்தான். பெண்ணின் பெருமையைக் கெடுத்த அரக்கனின் இரத்தத்தைத் தடவியே கூந்தலை முடிவது எனப் பாஞ்சாலி சபதம் பூண்டாள். துரியோதனன் தொடையைப் பிளக்க பலபீமன் விரதம் பூண்டான். பன்னிரண்டு ஆண்டு, காட்டிலும்,

ஓர் ஆண்டு காணுமலும் திரிந்து வந்தால் அரசைத் தருவதாகச் சொல்லி, அரவக் கொடியோன் பாண்டவரைக் காட்டிற் கோட்டி, அவர்களைக் கொல்ல ஓயாமற் சூழ்ச்சி செய்துகொண்டே யிருந்தான்; கொலையாளிகளையும், அரக்கரையும், பூதங்களையும் ஏவினுன்; குடி நீரில் விடங் கலந்தான். கண்ணன் அருளால் அன்பர் தீதின்றித் தப்பிப் பிழைத்தனர்! வியாசரிடம் பஞ்சாக்ஷரி உபதேசம் பெற்று விஜயன், அரனை நோக்கி அருந்தவம் புரிந்து, பாசுபதாஸ்திரம் பெற்று வந்தான். விராடன் அரண்மனையில் ஓராண்டு கரந்துறைந்து, பிறகு கண்ணனைத் தூதனுப்பிப் பாண்டவர் தாயாதிகளிடம் அரசுரிமை கேட்டனர். "இருக்கக்கூட இடந்தரேன்" என்று மறுத்தான் துரியோதனன்!

## 6. அறப் போர்!

அறப்போர் மூண்டது; கண்ணன் விஜயனைக் கருவியாகக் கொண்டு, தான் நடுநிலையி லிருந்து தேரோட்டி, பாரதப்போரைத் தூண்டி நடத்தினுன். குழலூதிய கண்ணன், பாஞ்சஜன்யம் முழங்கினுன்! போரிடை ஒருநாள், தனது சுற்றங் கண்டு, இரங்கி வீர விஜயன் தளர்ந்தான். அப்போது கண்ணன், உலகிற் கெல்லாம் வழிகாட்டும் சிறந்த அத்யாத்மயோக நூலான கீதையை யருளித் தனது விஸ்வரூபத்தையுங் காட்டி, தன் அவதார காரியம் நிறைவேறவே கருவியாகக் கொண்டதை விளக்கி, விஜயனை மீண்டும் வீர வேள்விக்கு ஏவி, கௌரவக் கும்பலைக் கட்டுடன்

வீழத்தி, தரும ராஜ்யத்தை நாட்டினன். கண்ணன் கீதை வடிவாக இன்றும் விளங்குகிறன். எங்கே கீதை முழங்குகிறதோ, அங்கே கண்ணன் உள்ளான்!

## 7. கீதா சாரம்

1. **எ**ழுந்திரு வீரா! போரிடைச் சோர்வேன்? யாக்கையே அழியும்; ஆன்மா வாழும். அனைத்தையும் ஆன்மமயமெனப் பாராய்; அனைத்துள்ளும் யானே ஆன்ம வடிவாயிருக்கிறேன். என் பணிக்காகவே, என்னுடன் வந்தாய்; என் உலக வடிவைப் பார்! நான் காலசக்தி. இந்த அதரும அரக்கரை உண்டு, பூப்பொறைநீக்கி. அத்யாத்ம தரும ராஜ்யத்தை நிலைநாட்டவே வந்தேன்! இது என் இச்சை; உன் சுதர்மம்.

2. சுயநலப் பற்றை விடுத்து, என் பணி புரி; விருப்பு வெறுப்பு என்னும் இருமை விலக்கு.

3. பல நினைவகற்று; ஒருமனப்படு; அன்புமும் அடக்கமும், அமைதியும் தெளிவும், ஆத்ம வீரமும், அஞ்சாவுறுதியுங் கொள்; அனைத்திலும் யானே; அனைத்தும் என்னுள். சம சித்தத்துடன் என்னை நினைத்து, என்னடி புகுந்து, எனக்கே வேள்வியாய், இயற்றுவதியற்று. நான், அடைக்கலம் புகுந்த அன்பரைக் காப்பேன்; நானே ஸர்வாத்மனுதன்!

4. நானே காலம்; நானே ஞாலம்; உயிர்களி லெல்லாம் உறையுள் யானே: முதலும், நடுவும் யானே; புலன்களில் நுகர்வும், புந்தியி லொளியும், வீரர் விரமும், வெற்றித் திறனும் யானே! வாழ்வை எனக்கே வேள்வி யாக்கு; பணியும் பயனும் எனக்கே நிவேதி.

பன்மணிக் கயிறெனப் பாருயிர்க் கெல்லாம் ஆதாரமாக அமைந்தவன் யானே!

5. எல்லாப் பொருளும் என்னுள் அடக்கம். என் இயற்கை, என் யோக மாயை, என் சக்தியினின்றே கற்பமும் ஊழியும் காட்டி மறையும்; சாட்சியாயிருக்கும் ஜீவன், புருஷன், க்ஷேத்திரக்ஞன் யானே. தூல சூக்கும வுடலான இயற்கை (பிரகிருதி), எனது செயற்கருவி. புருஷப் பிரகிருதியைத் தாங்கும் புருஷோத்தமன் யானே!

6. ஆசை, அச்சம், சினம், பொருமை, தளர்வு, தன்னலப் பற்றுகளை நீக்கு; மனக் கட்டுமானங்களை விடு; கடவுளுணர்வில் வாழ்வாங்கு வாழ்! காலத்திற்கேற்றபடி ஆண்டவன் உன்னுள் ஏவும் பணிகளைத் துணிந்துசெய்; அறிவினுல் உணர்; அன்பினுல் நெருங்கு; யோகத்தால் ஒன்றுபடு. அனைவருள்ளத்தும் யானொருவன் உள்ளேன்; எங்கு முள்ளேன்! நம்பு, நினை, முயல்; தீரனுக நிமிர்ந்து நில், வெல்!

7. எவர் எங்கே எந்த வடிவில் என்னைப் போற்றினும் அந்த வடிவில் ஆங்காங்கு அவரவர்க்கு அருள்புரிவேன்.

8. பொறுமையும் பணிவும் புலனடக்கமும் அறிவும் அன்பும் ஆண்மையும் போற்றி, அச்சம் அகந்தை அடிமைப்பற்று,பதற்றம் மயக்கம்,பொருமை யின்றி, முக்குணக் கட்டை முற்றிலும் உடைத்து, என்னையே நம்பி, என்னிலே நினைத்து, எனக்கே வேள்வியாய் என் பணி புரிக! என்னுடன் ஒன்றி யிருத்தலே யோகம்; உயிர்வாழ் வெல்லாம் யோக மாகுக. ஓம் தத்ஸத்!

## 8. கீதா யோகம்

அத்யாத்ம யோகத்தால் உள்ளும் புறமும் பரம் பொருளைக் கண்டு கலந்து மானிடம் தெய்வ மாறுதல் அடைந்தாலே, அசுரமாயங்கள் ஒழிந்து, உலகில் அமைதியும் இன்பமுந் துலங்கும். அறிவு, அன்பு உண்மை, உறுதி, தூய்மை, வாய்மை, சர்வாத்ம சமத்வம், ஆன்மசக்தி, இவையே, அந்த மாறுதலுக்கு வழியாகும். மனித ஜாதியிடம் யோகசக்தி யின்மையால், இப் பெரிய காரியம் இதுகாறும் நிறைவேறவில்லை.

உள்ளும் புறமும் கடவுளைக் கலந்த சுத்த சுதந்தர சமத்வ வாழ்வையே கீதை உபதேசிக்கிறது; கீதை அறிவுப்பசிக்கு அரிய விருந்து; வீழ்ந்தோரை உயர்த்தும் வீரக்கனல்; வாழ்வுக்குச் சஞ்சிவி; பந்த வினைகளைப் போக்கும் சுதந்தர சக்தி; மனப்போர்களை ஒழிக்கும் ஞானவாள்; அது உலகிற்கே அரிய மெய் வழி வேதமாகும். கீதை வழிப்படி, எக் காரியத்தையும் ஈச்வரார்ப்பணமாகவே வெற்றியுடன் செய்யலாம்; தேவஜீவனம், தேவஜாதி, சுவர்க்க ராஜ்யம், சத்திய யுகம், ஆத்ம சமரசம், இவையே நமது உன்னத லட்சியம். இந்த லட்சியத்தை அடையவே கீதை தக்க வழி காட்டுகிறது. உலகாட்சி மனையாட்சிமுதல், மனிதன் தன்னைத்தான் ஆளும் ஆத்ம சுயாட்சி வரையில் உள்ள ஒவ்வொரு நுண்ணிய செயலையும் கீதா யோக மாக்கலாம்; வினை முளைத்து, அன்பு மலர்ந்து, ஞானம் பழுத்து, ஆண்டவனுக்கே அப்பழத்தை நிவேதிக்கும் அகத்துறவையே, இப் பொதுமறை போற்றுகிறது.

கீதைவீரன், ஆத்மவீர னுவான்; அவன் எதற்கும் அஞ்சான்; ஆண்டவனுக்கே ஆளாகி, காலத்திற் கேற்றபடி திருவருள் ஆணையைப் புரிந்து வாழ்வான். கீதாதருமம், வாழ்வையே யோகமாக்கி, பாரத ஜாதியை வீரதீரராக நின்று நிலவச் செய்யும்; அதைப் பின்பற்றுவோம்!

"செய் கடமை; பலனைக் கருதாதே;
கடவுள் மகிழக் கடமை செய்;
வீரனே! நில், வெல், செல் முன்னே"

என்று கீதை தூண்டுகிறது!

பாரதப் போருக்குப் பிறகு பாண்டவர், கண்ணன் கருத்தின்படியே தரும ராஜ்யத்தை நாட்டினர்; கண்ணன் துவாரகையில் கீதா ராஜ்யத்தை நிலை நாட்டினுன். இறுதி நாளில் ஒரு வேடன் அம்பு, கண்ணன் காலிற் பாய்ந்தது. அப்போது உத்தவருக்குச் செய்த உபதேசம் ஞான கீதையாகும்: "புலனை அடக்கு; மனதை வெல்; உள்ளம் சுத்த பரமாத்மன் கோயில். ஜீவன் பரமனுடன் கலந்து இன்புறுதலே, வாழ்வின் பலன்" என்பதே அதன் கருத்து. அனைவரும் கீதா யோகத்தைப் பாராயணஞ் செய்யுங்கள்; உத்தவ கீதையைச் சாதனஞ் செய்யுங்கள்.

வாழ்க கண்ணன் திருநாமம்!

